# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 2 • Issue: 9 • November 2015 • Annual Subcription Rs. 100/- • மலர் 2 • இதழ்: 9 • நவம்பர் 2015 • வருடச் சந்தா ரூ. 100/-



## கவனத்தைக் குவித்தல்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே


| | |
|---|---|
| கவனத்தைக் குவித்தல் | 3 |
| சந்தா விபரம் | 6 |
| ஆசிரியர் பகுதி | 7 |
| மனப் பயிற்சியும், புரிதலும் (கேள்வி பதில்) | 8 |
| வேண்டுகோள் | 10 |
| ஜென் கதை | 11 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 12 |






போகங்களின் பிடியிலும், மனோலயங்களின் பிடியிலும், உறைநிலையின் பிடியிலும், மாட்டிக் கொள்ளாமல் இருப்பது தான் நம் மனதின் ஆரோக்கியமான நிலை. லயத்தின் பிடியிலிருந்து நாம் விடுபட்டால் மட்டுமே நம்மால் நமக்குத் தேவையான இடத்தில் லயத்தை பயன்படுத்த முடியும்.

– ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விருப்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விருப்புகிறீர்களா?


Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



அட்டை படம் :
புகைப்படக் கலைஞர். திரு. **சுதாகர்,** திருச்சி.



This Book Designed By:
**ORANGE DESIGNER SALEM**
Mobile : 9894377433


## நெரூரில் 3 நாள்
# ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : **காஞ்சி சங்கர மட வளாகம்,** நெரூர் அக்ரஹாரம்.

நாள் : 20.11.2015 வெள்ளிக்கிழமை இரவு 7.00 மணி முதல்
22.11.2015 ஞாயிற்றுக்கிழமை மாலை 3.00 மணி வரை

தலைப்புகள் :

**ஞானத் தெளிவு | அகம் புறம் | நான் யார்? | நினைவும் சிந்தனையும் | கர்ம வினைகள் | ஞானத் தெளிவில் உறுதி**

நன்கொடை ரூ. 1200/-

20.11.2015 அன்று அனைவருக்கும் இரவு உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இரவு உணவுக்குப்பின் அறிமுக வகுப்போடு ஞானமுகாம் ஆரம்பிக்கப்பட உள்ளது.

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் படுக்கை வசதியுடன் (Air Pillow, போர்வை) வருமாறு கேட்டுக்கொள்கிறோம். ஆண்கள் தங்குவதற்கும், பெண்கள் தங்குவதற்கும் தனித்தனி இடவசதி உள்ளன.

விபரங்களுக்கு

திரு. **இராஜகோபால்** செல் : 93605 79181
திரு. **சுவாமிநாதன்** செல் : 99422 89420
திரு. **மோகன்** செல் : 92454 40575
திரு. **பாலசுப்ரமணியம்** செல் : 97872 53751

அனைவரும் வருக! தெளிவு பெறுக!!

# திருவண்ணாமலையில் பகவத் ஐயாவின் சத்சங்கம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் 02-12-2015 முதல் 18-01-2016 வரை திருவண்ணாமலையில் தங்கியிருக்கிறார்.

சத்சங்க நேரம் : தினசரி காலை 10:00 மணி முதல் 12:00 மணி வரை
மொழி : **English / தமிழ்**
இடம் : **108, T.S.R. நகர், செங்கம் ரோடு, யோகிராம் சுரத்குமார் ஆஸ்ரமம் பின்புறம், திருவண்ணாமலை.**
தொடர்புக்கு : 99442 15677 / 9789 165555



# கவனத்தைக் குவித்தல்

"எனது பையன் எப்போதும், டி.வி. விளையாட்டு என இருந்து வருகிறான். படிப்பில் கவனம் செலுத்த மறுக்கிறான். படிப்பில் அக்கறை கொள்ளுமாறு செய்வது எவ்வாறு?"

–இப்படிப் பல விதமாக பெற்றோர்கள் மற்றும் ஆசிரியர்கள் கேட்கிறார்கள்.

ஆன்மிக உலகத்தை எடுத்துக் கொண்டால் கவனச் சிதறல் தவறானது என்பதும் கவனத்தைக் குவித்தல் மட்டுமே சிறந்தது என்பதும் அனைவரும் அறிந்ததே.

பாடத்தில் கவனம் செலுத்த முடியவில்லை என்பது கவனிக்க வேண்டிய ஒன்று தான். பாடத்தில் கவனம் செலுத்தாவிட்டால் நாம் எவ்வளவுதான் படித்தாலும் நாம் படித்த பாடம் மனதில் தங்காது.

கணவன் வாக்கிங் புறப்பட்டுக் கொண்டிருந்தான். மனைவி புடவை ஒன்று வாங்க நினைத்தாள்.

"ஏனுங்க, ஸாரி கடைக்குப் போகலாமா?" – கணவனிடம் கேட்டாள்.

கணவன் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தான். பிறகு "வா போகலாம்" என்று கூறி பைக்கை ஸ்டார்ட் செய்தான்.

அவன் மறுப்பேதும் சொல்லாது, உடனே சம்மதித்தது அவளுக்கும் ஆச்சரியமாக இருந்தது. மகிழ்ச்சியுடன் அவள் பைக்கின் பின்னால் உட்கார்ந்து கொண்டாள்.

ஆனால் பைக் ஸாரி கடைப் பக்கம் திரும்பாமல் வேறு திசையில் வேகமாகச் சென்றது. மனைவிக்குப் புரியவில்லை.

"என்னங்க, பாதை மாறிப் போகிறீர்கள், இடது பக்கம் திரும்புவதற்குப் பதில் வலது பக்கம் திரும்பி விட்டீர்கள்!"

"இல்லையே ; நான் சரியாகத்தான் போகிறேன். தினசரி போகும் எனக்கா பாதை தெரியாது? என்றைக்கோ ஒரு நாள் வரும் நீதான் பாதையை மறந்துவிட்டாய்."

–இப்படிக் கணவன் கூறியதும் அவள் மேலும் குழம்பினாள்.

"ஸாரி கடைக்கு நீங்க ஏங்க தினசரி போக வேண்டும்? இப்போ நாம் எங்கே போகிறோம்?"

– மனைவி கேட்டாள்.

இப்போது கணவன் குழம்பினான்.

"ஸாரி கடைக்கு வருவதாக நான் எப்போது உன்னிடம் கூறினேன்? நீதான் என்னுடன் ஏரிக் கரைக்கு வாக்கிங் வருவதாகக் கூறி பைக்கில் ஏறிக் கொண்டாய். பைக் இப்போது வழக்கம் போல் ஏரிக்கரைக்கு தான் போய்க் கொண்டிருக்கிறது."

மனைவி ஸாரி கடை என்று கூறியதை கணவன் ஏரிக்கரை எனப் புரிந்து கொண்டதால் இந்தப் பிரச்சினை.

அவன் ஏரிக்கரைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்ததால் அவள் கூறியதும் ஏரிக்கரை என்றே அவனுக்குக் கேட்டது.

அவள் கூறியதை அவன் முதலிலேயே சரியாகக் கவனித்திருப்பானேயானால் கடை என்பதை சரியாகப் புரிந்து கொண்டிருப்பான்.

இதுபோல் இன்னுமொரு கதையைக் கூறுவார்கள்.

ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருந்தார்.

மாணவன் ஒருவன் வகுப்பறையின் ஜன்னலுக்கு வெளியே மரத்திலிருக்கும் அணிலொன்றைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

அணிலானது மரத்திலிருக்கும் பொந்து ஒன்றில் நுழைந்து கொண்டிருந்தது. அதன் வால் மட்டும் முழுவதுமாக உள்ளே நுழையவில்லை.

ஆசிரியர் அந்த மாணவனிடம் கேட்டார்: "நான் நடத்தியது உள்ளே நுழைந்ததா?"

மாணவன் பதில் கூறினான் : "எல்லாம் நுழைந்து விட்டது; வால் மட்டும் முழுவதுமாக உள்ளே நுழையவில்லை."

இப்படி இரண்டு மனதுடன் ஒருவர் பாடத்தைக் கவனித்தால் படித்த பாடம் எவ்வாறு மனதில் தங்கும்?

ஒரு மாணவனை எப்படி அவனுடைய பாடத்தில் அக்கறை கொள்ளச் செய்வது?

மாணவனுடைய கவனத்தை எவ்வாறு ஒருங்கிணைப்பது?

மாணவனுடைய கவனம் சிதறிப் போகாமல் எவ்வாறு ஒருங்கிணைப்பது?

ஒரு மாணவன் பாடத்தைச் சரியாகப் படிக்காமலிருப்பதற்குக் காரணம் கவனச் சிதறல் தானே?

கவனச் சிதறல் தான் காரணம் என்றால் மட்டுமே கவனத்தை ஒருங்கிணைத்து கவனத்தைச் சரி செய்ய வேண்டும்.

ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருக்கும் போது மாணவன் அதனைக் கவனிக்காமல் அணிலை கவனித்துக் கொண்டிருக்கிறான்.

இதுதான் கவனச் சிதறலா?

பாடத்தோடு அவனைத் தொடர்பு படுத்திப் பார்ப்போமாயின்

அவனுடைய கவனம் சிதறியுள்ளது என்பதை அறிய முடியும்.

ஏனெனில் பாடத்தில் ஒருங்கிணைய வேண்டிய கவனம் அங்கே இணையாமல் அங்கிருந்து சிதறி விட்டது. அப்படிச் சிதறிய அந்த கவனம் என்ன ஆகி விட்டது?

அந்தக் கவனம் அப்படியே சிதறி மறைந்து போய் விடவில்லை. அந்தக் கவனம் அணிலின் செயல் மீது ஒருங்கிணைந்து விட்டது.

அவனுடைய கவனமானது பாடத்தைப் பொறுத்த வரையில் சிதறிவிட்டது. ஆனால் அணிலைப் பொறுத்த வரையிலும் அவனுடைய கவனம் சிதறவில்லை.

அவனுடைய கவனத்தைப் பாடத்துடனோ அல்லது அணிலுடனோ இணைக்காமல் அவனுடைய கவனத்தை மட்டும் தனித்துப் பார்போமாயின்,

அவனுடைய கவனம் அதனளவில் எவ்வாறு உள்ளது?

அது இணைந்துள்ளதா, அல்லது சிதறியுள்ளதா?

கவனம் எப்போதும் கவனமாகவே உள்ளது. அது இணையும் இடம் தான் மாறியுள்ளது.

பாடத்தில் இணைய வேண்டிய கவனம் பாடத்தில் இணையாமல் அணிலின் மீது இணைந்து கொண்டதால்

அதனைக் கவனச் சிதறல் என்று கூறுகிறோம்.

ஆனால் உண்மையில் அது கவனச் சிதறல் அல்ல.

அதுவும் ஒருங்கிணைந்த கவனமே. அதுவும் ஒரு கவனக் குவிதலே.

நம் விரும்பிய வகையில் நமது கவனம் பாடத்தின் மீது குவியாமல்

நாம் விரும்பாத வகையில் நமது கவனம் அணிலின் மீது குவிந்துள்ளது என இதனை நாம் எடுத்துக் கொள்ளலாமா?

விரும்பாத இடத்தில் கவனம் குவிந்துள்ளதாகவும், விரும்பிய இடத்தில் கவனம் குவியமலிருப்பதாகவும் இதனை எடுத்துக் கொள்ளலாமா?

அப்படியா இங்கு நடந்துள்ளது?

அப்படி இல்லை நாம் விரும்பும் இடத்தில் தான் நமது கவனம் குவிந்துள்ளது. விரும்பாத இடத்தில் கவனம் குவியவில்லை.

அணிலைப் பார்ப்பதையே நாம் விரும்புகிறோம். பாடம் நமது ஆர்வத்துக்குரியதாக இல்லை. ஆகவே நமது கவனம் பாடத்தை விட்டு விட்டு, ஆர்வம் உள்ள அணிலின் மீது குவிந்து விட்டது.

“உனக்கு டி.வி. பார்ப்பது பிடிக்குமா அல்லது பாடம் படிக்க பிடிக்குமா?” என்று ஒரு மாணவனிடம் கேட்பதாக வைத்துக் கொள்வோம்.

அவன் என்ன பதில் கூறுவான்?

“டி.வி. தான் பிடிக்கிறது; பாடம் பிடிக்கவில்லை” என்று தான் கூறுவான்.

இந்நிலையில் அவனுடைய கவனம் எங்கே தான் குவிய முடியும்?

ஆர்வமுள்ள டி.வி.யில் தான் அவனுடைய கவனம் குவிய முடியும்.

ஆர்வம் குறைந்த பாடங்களில் அவனுடைய கவனம் குவியாமலிருப்பதும் இயற்கையானதே.

இதுதான் இயற்கை என்று இதனை அப்படியே விட்டு விட வேண்டுமா?

பிடித்ததையே கவனித்து விட்டுப் போகட்டும் என விட்டுவிட வேண்டியது தானா?

இப்போது உங்களிடம் புதிதாக ஒரு கேள்வி.

“கவனம் முக்கியமானதா அல்லது கவனச் சிதறல் முக்கியமானதா?”

“Concentration முக்கியமானதா அல்லது Concentration இல்லாமலிருப்பது முக்கியமானதா?”

இப்படி ஒரு கேள்வி கேட்டால் நாம் என்ன பதில் கூறுவோம்?

“கவனக் குவிதல்தான் முக்கியமானது” என்று கண்ணை மூடிக் கொண்டு கூறி விடுவோம்.

ஏனெனில் கவனக் குவிதலின் உதவி இல்லாமல் நாம் எதனையும் செய்ய முடியாது. அப்படி நாம் எதனைச் செய்தாலும் அது வெற்றி பெறாது.

மன ஈடுபாட்டுடன் செய்யப்படும் அனைத்து செயல்களும் வெற்றியடைந்து விடும்.

மன ஈடுபாட்டுடன் செய்யப் படாத எந்தச் செயலும் வெற்றி பெறச் சாத்தியமே இல்லை.

இதனால் கவனத்தைக் குவித்துப் பழகுவதற்காகப் பலவிதமான தியானப் பயிற்சிகள் கொடுக்கப் படுகின்றன.

தியானப் பயிற்சிகள் பலவற்றில் ஈடுபடுவோர்களுக்கு மனதைக் குவித்து செயல்களில் ஈடுபடுவது எளிதாக உள்ளது.

மீண்டும் பழைய கேள்விக்கே வருவோம்.

**“கவனம் முக்கியமானதா அல்லது கவனச் சிதறல் முக்கியமானதா?”**

**கவனம் முக்கியமானது என்பது நம் அனைவருக்கும் தெரிந்துள்ளது.**

**அதையும் விட முக்கியமானது கவனச் சிதறல்தான் என்பது வியப்புக்குரிய செய்தியாகும்.**

“கவனச் சிதறல் எப்படி முக்கியமானதாக இருக்க முடியும்?” என்றே நமக்குத் தோன்றுகிறது.

கவனக்குவிதலை யோக சாஸ்திரமானது “மனோலயம்” எனப் பெயரிட்டு அழைக்கிறது.

நமக்கு ஏற்படும் மனோ அனுபவங்கள் ஒவ்வொன்றும் மனோலயத்தின் விளைவாகவே ஏற்படுகிறது.

நமக்கு ஏற்படும் மகிழ்ச்சி என்பது ஒரு மனோலயமே; நமக்கு ஏற்படும் பயம் என்பது ஒரு மனோலயமே; நமக்கு ஏற்படும் துயரம் என்பது ஒரு மனோலயமே.

மனோலயத்தைவிடவும் உயர்ந்தது மனோ நாசம் என்று கூறப்படுகிறது.

மனோநாசம் என்பது மனதே இல்லாத நிலையைக் குறிக்கவில்லை. மனோலயம் கலைந்த நிலையைத்தான் மனோநாசம் என்று யோக சாஸ்திரம் குறிப்பிடுகின்றது.

மனோ நாசம் என்று கூறுவதை விட மனோலய நாசம் என்று குறிப்பிடுவோமானால்

அது சுய விளக்கமுடையதாக இருக்கும்.

மனோலயத்தைவிடவும், மனோலய நாச நிலைதான் உயர்ந்தது என நமது யோக சாஸ்திரங்கள் கூறுவதில் தவறேதும் கிடையாது.

மனோலயம் என்பது கவனக் குவிதலைக் குறிக்கிறது.

மனோலய நாசம் என்பது கவனத்தின் சிதறலைக் குறிக்கிறது.

லயம் என்பது தற்காலிகமாக வந்து வந்து செல்லக் கூடிய நிலையாகும். லயம் இல்லாதிருக்கும் நிலைதான் நமது யதார்த்தமான நிரந்தரமான நிலையாகும்.

லயம் இல்லாத யதார்த்தமான – சாதாரணமான – எப்போதும் உள்ளதான நிலைதான் கடல் ஆகும்.

அந்தக் கடலில் தற்காலிகமாகத் தோன்றும் அலைதான் லயம் ஆகும்.

லயம் அனைத்தும் தோன்றியவாறே மறைந்துவிடவும் வேண்டும். அப்படி அது கலைந்திடாமல் இருப்பதைத் தான் பந்தம், பற்று, ஸம்சாரம் என சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

லயத்திலிருந்து விடுபடுவதைத்தான் விடுதலை – முக்தி – மோட்சம் எனவும் விவரிக்கின்றன.

ஒரு மனது ஆரோக்கியமாக, இருக்க வேண்டுமென்றால்,

அது எல்லா அனுபவங்களிலிருந்தும் விடுபட்டிருக்க வேண்டும்.

நமது நாக்கினைப் பற்றி நமக்குத் தெரியும். கசப்பைச் சாப்பிட்டால் நாக்கிற்குப் பிடிப்பதில்லை. இனிப்பைச் சாப்பிட்டால் மிகவும் பிடிக்கிறது.

இனிப்பைச் சாப்பிட்டால் நான் அந்தச் சுவையை விடாமல் பிடித்து வைத்துக் கொள்வேன்” என நம் நாக்கு முடிவெடுக்கிறது என வைத்துக் கொள்வோம். அதன் பொருள் என்ன?

நமது நாக்கு, அது சாப்பிட்ட இனிப்பு சுவையிலிருந்து விடுபட முடியாவிட்டால்

அதன் பொருள் என்ன?

நம் நாக்கு கெட்டு விட்டது என்று தான் பொருள்.

பழுதடைந்துவிட்டது என்பது தான் அதன் அர்த்தம்.

நம் நாக்கு அதன் ஆரோக்கியத்தை இழந்து விட்டது என்பது தான் அர்த்தம்.

நம் நாக்கு ஆரோக்கியமாக இருப்பதற்கான அடையாளம் என்னவென்றால்

அது அனைத்து சுவைகளையும் பிரதிபலித்துக் காட்ட வேண்டும். அடுத்த கணமே அந்தச் சுவையிலிருந்தும் விடுபட்டு விட வேண்டும்.

இது நம் புலன்களுக்கு மட்டுமல்ல, நம் மனதுக்கும் இதுதான் ஆரோக்கியமான நிலையாகும்.

நம் மனது ஆரோக்கியமாகச் செயல்பட வேண்டுமென்றால்

அங்கு மனோலயம் ஏற்படலாம், ஆனால் மறுகணமே அந்த மனோலயம் கலைந்து விட வேண்டும். லயநாசம் ஏற்பட்டுவிட வேண்டும்.

நம் மனதானது டி.வி.யில் லயமாவதில் தவறில்லை; அணிலின் மீதும் லயமாவதில் தவறில்லை

ஆனால் அதிலிருந்து விடுபடவும் தெரிந்திருக்க வேண்டும்.

இனி நாம் நமது பிரதானமான கேள்விக்கு வருவோம்.

“மாணவன் அவனுடைய படிப்பில் அக்கறை கொள்ளுமாறு செய்வது எவ்வாறு?”

தண்ணீரானது திரவ நிலையில் இருக்குமேயானால்

அதனை எந்தப் பாத்திரத்தில் ஊற்றுகிறோமோ, அந்தப் பாத்திரத்தின் வடிவை மிகச் சுலமாக எடுத்துக் கொள்ளும்.

தண்ணீரானது திரவ நிலையில் இல்லாமல் உறைநிலையில் இருக்குமேயானால்

அது சுலபத்தில் தனது வடிவை மாற்றிக் கொள்ளாது.

மனோலயங்கள் அனைத்தும் உறை நிலையே ஆகும். லயத்திலிருந்து விடுபடும் நிலை தான் திரவ நிலையாகும்.

திரவநிலை தான் நம்முடைய இயற்கையான நிலையாகும். லயநாச நிலை தான் நமது இயற்கையான நிலையாகும்.

மனோலயங்கள் அனைத்தும் தற்காலிகமான செயற்கையான நிலையேயாகும்.

செயற்கையான மனோலயத்திலிருந்து இயற்கையான திரவநிலைக்கு நம் மனம் வந்து விட வேண்டும்.

மனோலயங்கள் அனைத்தும் செயற்கையானவை என்று புரிந்து கொள்வதே அவற்றிலிருந்து விடுபடுவதற்கான வழி.

இன்ப சுகங்களைப் பற்றிப் பிடிக்கும் போக்குதான் – போகங்களின் மீதுள்ள பற்றுதான்

உறை நிலையிலிருந்து விடுபட்டு நமது இயற்கையான திரவநிலைக்கு வருவதற்குத் தடையாக உள்ளது.

"இக அமுத்ர போகே விராக வைராக்ய" என யோக சாஸ்திரம் இதுபற்றிக் கூறுகிறது.

"இந்த உலகத்து மற்றும் மறு உலகத்துப் போகங்களிலிருந்து விடுபட்டிருப்பதே வைராக்கியம்" என்று கூறுகிறது.

உடல் ரீதியான மனரீதியான இன்பங்கள் எனப் பொருள் கொள்வது தான் சரியானதாகும். இன்பங்களில் மூழ்கியிருப்பது தான் வைராக்கியத்தை – விடுதலையைத் தடை செய்கிறது.

''மனதினுடைய இயற்கையான – ஆரோக்கியமான நிலை திரவநிலை தான்" எனப் புரிந்து கொள்வதே முக்கியமானதாகும்.

அந்தப் புரிதலே – தெளிவே நமக்குத் தேவையான செயலைக் கொண்டு வரும்.

போகங்களின் பிடியிலும், மனோலயங்களின் பிடியிலும், உறைநிலையின் பிடியிலும், மாட்டிக் கொள்ளாமல் இருப்பது தான் நம் மனதின் ஆரோக்கியமான நிலை என்று புரிந்து கொள்வது தான் முக்கியமானதாகும்.

லயத்தின் பிடியிலிருந்து நாம் விடுபட்டால் மட்டுமே நம்மால் நமக்குத் தேவையான இடத்தில் லயத்தைப் பயன்படுத்த முடியும்.

நாம் எந்த லயத்திலும் மாட்டிக் கொள்ளாத நிலையில் ஒரு மாணவன் அவனுடைய தேவைக்கேற்ப அவனால் சுலமாக அவனுடைய பாடங்களில் கவனத்தைச் செலுத்த முடியும்.

50 கிலோ எடையுள்ள ஒரு பெட்டியைத் தூக்க வேண்டும் என்று நாம் முடிவு செய்தோமானால்

அதை தூக்குவதற்கு வேண்டிய சக்தி நம்மையறியாமலேயே நமது கைகளில் சேர்ந்துவிடும்.

தூக்கி முடித்ததும், தற்காலிகமாகச் சேர்ந்த அந்தச் சக்தியும் மறைந்துவிடும்.

பாடம் படிப்பது அவசியமான ஒன்று என ஒரு மாணவன் முடிவெடுத்தால் மட்டும் போதும்.

அதற்குத் தேவையான லயம் – மனக் குவிதல் தானாகவே ஏற்பட்டுவிடும்.

இதன் முதற்படியாக, மனதின் திரவ நிலை பற்றியும் – குவிதலிலிருந்து விடுபட்டிருப்பது பற்றியும்

தெரிந்து கொள்ள வேண்டுவதும் மிகவும் அவசியமாகும். நம்முடைய வாழ்க்கை என்னும் பாடத்திட்டத்தில்– "மனக்குவிதலை" மட்டுமே தெரிந்து வைத்துள்ளோம்.

நாம் தெரிந்து கொள்ள வேண்டிய பாடத்திட்டத்தில், ''மனக்குவிதலிலிருந்து விடுபடுவதையும்''யும் இணைத்துக் கொள்ள வேண்டும். அதை நமது பாடத்திட்டத்தில் சேர்த்துக் கொள்ளாத வரையிலும் மனக்குவிதலை நம்மால் சரியாக நிர்வாகம் செய்ய முடியாது.

மனக்குவிதலிலிருந்து விடுபடத் தெரிந்த மாணவன் மட்டுமே. தனது மனக்குவிதலை பாடத்தில் இணைத்து வெற்றி பெறுகிறான்.

குறிப்பு: இக்கட்டுரையைப் புரிந்து கொள்வதில் சிரமம் இருக்கும் பட்சத்தில், இக்கட்டுரையை இருமுறை படித்து ஆய்வுக்கு எடுத்திட வேண்டுகிறோம்.



## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–** **ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission**

**A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் இந்த சகப் பயணியின் வணக்கம்.

ஞானம் என்ற புரிதலால் வாழ்க்கை என்ற புனிதப் பயணம் மேற்கொண்டிருக்கும் உங்கள் அனைவருக்கும் தீபாவளி நல்வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறேன்.

விடுதலை பெற்றவர்களே தன் சுய ஒளியால் தன் பாதையில் சுதந்திரமாக பயணிக்க கூடியவர்கள்.

இச்சிறப்பு நம் பகவத் ஐயாவால் நாம் அனைவரும் கிடைக்கப் பெற்றோம்.

"யாம் பெற்ற இன்பம்
பெறுக இவ்வையகம்"

என்ற நோக்கத்தில் புதியவர்களுக்கும் ஐயாவின் புரிதலைக் கொண்டு சேர்ப்பது புரிந்தவர்களாகிய நம் அனைவரின் கடமை ஆகும்.

அந்த வகையில் திரு. சோமசுந்தரம் அவர்கள் ஞான முகாம் ஒன்றை சென்ற அக்டோபர் 2-ம் தேதி முதல் 4-ம் தேதி வரை பழனியில் ஏற்பாடு செய்திருந்தார். இதனைத் தொடர்ந்து 05.10.2015 அன்று சென்னை அருள்ஜோதி அண்ணா ஆலயத்தில், "சன்மார்க்கத்தில் எது கடவுள்?" என்ற தலைப்பில் ஐயா அவர்களின் சிறப்புரை நிகழ்ந்தது.

மேலும் கோவையில் 10.10.2015 அன்று ஐயாவின் ஞான சிறப்புரையை பொள்ளாச்சி திரு. இரவிச்சந்திரன், திரு. மாதவன் பாபு மற்றும் திரு செந்தில் அவர்களும், 11.10.2015 அன்று திருப்பூரில் ஒரு நாள் ஞான முகாமாக திரு. ஜெயச்சந்திரன் அவர்களும் அவருக்கு துணையாக திரு. இராஜேஸ்குமார் அவர்களும் இணைந்து மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தனர். இவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்வோம்.

சென்னையில் 17.10.2015 அன்று அம்பத்தூர் ஸ்ரீ பகவத் மிஷன் மையத்திலும் 18.10.2015 அன்று வில்லிவாக்கத்தில் உள்ள பூர்ணானந்தா சத்சங்க ஹாலிலும் ஐயாவின் ஞான சிறப்புரை நடைபெற்றது. இதனை ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம் ஏற்பாடு செய்திருந்தது. இதில் திரு. ராமனய்யா அவர்கள் ஐயாவின் சத்சங்கத்திற்காக பூர்ணானந்தா சத்சங்க ஹாலை இலவசமாக கொடுத்து. அனைவருக்கும் உணவளித்து உதவிபுரிந்தார், அவருக்கு நாம் நன்றிகளையும், பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்வோம்.

மேலும் 25.10.2015 அன்று சென்னை துறைபாக்கத்தில் TVH பார்க் வில்லாவில் உள்ள கம்யூனிட்டி ஹாலில் நடைபெற இருந்த ஐயாவின் சத்சங்க நிகழ்ச்சி தவிர்க்க முடியாத தடங்கலால் இறுதி நேரத்தில் மாற்றப்பட்டு துறைப்பாக்கத்திலேயே SRG காம்ப்ளக்ஸில் மிக சிறப்பாக நடைபெற்றது. தவிர்க்க முடியாத தடைகள் வந்தபோதும் அந்த சூழ்நிலைகளையும் எதிர்கொண்டு சிறப்பாக மாற்று ஏற்பாடு செய்த திரு. J.சிவசந்திரன் மற்றும் அவரது மனைவி Dr. S. சாந்தி அவர்களுக்கும் நமது நன்றியையும் பாராட்டையும் தெரிவித்துக் கொள்வோம். இவர்களை போன்ற பலரது முயற்சியில் ஐயா வழங்கும் புரிதலை புதியவர்கள் பலருக்கும் பகிர்ந்து கொண்டிருக்கிறோம்.

இந்தப் புரிதல் ஒன்றே மனதிற்கு நீண்ட கால பயிற்சி முயற்சி கொடுக்காத பெரிய மாற்றத்தை; விடுதலையைக் கொடுக்கிறது.

இதன் மதிப்பை உணர்வதோடு மற்றவர்களோடு பகிர்ந்து கொள்வதும் நமது கடமை. இதை புரிந்து கொண்டவர்களும், பகிர்ந்து கொண்டவர்கள் அனைவரும் ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களே ஆவர்.

தற்போது சேலம் திருவருட்சோலையில் "ஸ்ரீ பகவத் பவன்" ஆஸ்ரம கட்டிட பணி நடைபெற்று வருவது அனைவரும் அறிந்ததே. இது ஸ்ரீ பகவத் ஐயாவின் இல்லமாக அமைவதோடு நமது பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களின் இல்லமாகவும் இருந்து உலகுக்கே தொண்டாற்றப் போகிறது.

இந்த கட்டிடப்பணி தற்போது நமது அன்பர்கள் பலரின் பங்களிப்பால் விரைவாக நடைபெற்று வருகிறது.

நமது ஆஸ்ரமத்தின் மொத்த பரப்பளவு 5500 சதுரடியில் அமையவிருக்கிறது. எனவே அதற்கான செலவுகளும் மிக அதிகமாக இருக்கிறது. இது நம் அனைவரது முயற்சியிலும் நடைபெற்று வருகிறது.

எனவே, ஸ்ரீ பகவத் ஐயாவிற்கான இல்லத்தில்; ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தில் நம் அனைவரது பங்களிப்பும் இருக்க வேண்டுகிறேன். நாம் அனைவரும் ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாக மட்டும் அல்லாமல் ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாகவும் (Founders) அமைய வேண்டும் என வேண்டி விரும்பிக் கேட்டுகொள்கிறேன்.



“மனப் பயிற்சியும் புரிதலும்”

# கேள்வி பதில்



V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி :** நான் கடந்த 10 வருடங்களாக ஓர் ஆன்மிக அமைப்பின் யோகப்பயிற்சியை தினமும் தவறாமல் தீவிரமாகச் செய்து வருவது வழக்கம். பகவத் ஐயாவின் மனதைப் பற்றிய புதிய அணுகுமுறையை தெரிந்து கொண்ட பிறகு நான் செய்து வந்த யோகப் பயிற்சியின் தீவிரம் குறைந்துவிட்டது. முன்பு யோகப்பயிற்சியில் இருந்து வந்த மன ஈடுபாடு இப்போது இல்லை? அது ஏன்? 10 வருடமாக முறையாக கடைபிடித்து செய்து வந்த யோகப்பயிற்சியை இப்போது ஏன் சரியாகச் செய்ய முடியவில்லை? இப்போது சரியாகச் செய்ய முடியவில்லையே என்ற குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது? நான் என்னுடைய குற்ற உணர்ச்சியிலிருந்து விடுபட்டு, எனக்கு என்ன நிகழ்ந்துள்ளது என்பதைப் புரிந்து கொண்டு, மன ஈடுபாட்டுடன் யோகப்பயிற்சியை எப்படிச் செய்வது?

**பதில் :** சிங்கப்பூரைச் சேர்ந்த அன்பர் ஒருவர் பகவத் ஐயாவின் புரிதலுக்கு முன்பாக தினமும் காலை 4:30 மணிக்கெல்லாம் எழுந்து 6:30 மணி வரை ஓர் ஆன்மிக அமைப்பின் யோகப் பயிற்சியைய தவறாமல் தீவிரமாகச் செய்துவது வழக்கம். இரவு 11,12 மணி என எப்போது படுத்தாலும் கூட காலை 4:30 மணிக்கு அலாரம் (Alarm) வைத்து எழுந்து யோகப்பயிற்சியை செய்து விடுவார். தனக்குத் தூக்கம் போதுமா, போதாதா என்றெல்லாம் யோசிப்பது கூட கிடையாது. எது எப்படி இருந்தாலும், என்ன தான் ஆனாலும் அந்தப் பயிற்சியை செய்து முடிப்பது ஒன்று தான் வழி என்று செய்து முடிப்பவர். தான் எங்கு சென்றாலும் நண்பர்கள், உறவினர்கள் என யாருடைய வீட்டுக்குச் சென்றாலும் குடும்பத்துடன் எங்காவது சுற்றுலா சென்றாலும் கூட எதற்காகவும் யோகப்பயிற்சியை செய்யத் தவறியது இல்லை.

இப்படிப் பட்ட நிலையில்தான் ஐயாவின் புத்தகங்களை வாங்கிப் படிக்கிறார். ஐயாவுடன் போனில் தொடர்பு கொண்டு பேசுகிறார். சிங்கப்பூரில் ஓர் ஞான முகாமை ஏற்பாடு செய்து ஐயாவின் கருத்துக்களை முழுமையாக உள் வாங்குகிறார்.

பகவத் ஐயாவின் புதிய அணுகுமுறையான ‘‘மனதில் அடைவதற்கு என்று எதுவுமில்லை’’ என்பதை கொஞ்சம், கொஞ்சமாகப் புரிந்து கொள்கிறார். தன்னுடைய ஆன்மிகப் பயிற்சியில் இருந்து வந்த தீவிரம் தானாகவே குறைந்து விடுகிறது. இத்தனை ஆண்டுகளாக செய்து வந்த பயிற்சியின் தீவிரம் குறைவதால் குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது. தனக்கு என்ன நிகழந்தது? குற்ற உணர்ச்சி ஏன் ஏற்படுகிறது? என்பதை கேள்வியாகத் தொடுத்தார் நண்பர்.

பகவத் ஐயா அவர்கள் ஓர் பெண்மணிக்கு கூறிய பதில் இதற்குச் சரியாக இருக்கும் என்பதால் இனி அதை பார்ப்போம்.

சென்னையைச் சேர்ந்த 70 வயது மிக்க பெண்மணி ஒருவர் 20 வருடமாக பிரதி மாதம் பெளர்ணமி அன்று திருவண்ணாமலை சென்று 16 கிலோ மீட்டர் கிரிவலம் நடைப் பயணமாகச் சென்று வருவதை வழக்கமாக வைத்திருந்தார். எத்தனையோ வேலை சூழ்நிலையிலும் கூட தவறாமல் திருவண்ணாமலை கிரிவலம் செல்வதில் தவறியதே கிடையாது. இப்பட்ட நிலையில் தான் ஐயாவின் சொற்பொழிவைக் கேட்டு, புத்தகம் வாங்கிப் படிக்கிறார். ‘‘மனதில் அடைவதற்கு என்று எதுவுமில்லை’’ என்பதை புரிந்து கொள்கிறார். கொஞ்ச நாட்களில் ஐயாவிடம் ‘‘நான் திருவண்ணாமலை கிரிவலம் செல்லலாம் தானே” என்று கேட்கிறார் அந்தப் பெண்மணி. “நீங்கள் திருவண்ணாமலை கிரிவலம் சென்று வாருங்கள் ஆனால் மனதில் அடைவதற்கு எதுவுமில்லை என்பதை புரிந்து கொண்டால் மட்டும் போதும்.” என்று ஐயா கூறுகிறார்.

இந்த முறை திருவண்ணாமலை சென்று திரும்பிய பெண்மணி ஐயாவிடம் “உடம்பெல்லாம் கடுமையாக வலிக்கிறது, உடல் ரொம்ப அசதியாக இருக்கிறது’’ என்று கூறுகிறார். அடுத்த முறை திருவண்ணாமலைக்குச் சென்று கிரிவலம் போகாமல் அண்ணாமலையார் சாமியைத் தரிசனம் செய்து விட்டு வீடு திரும்புகிறார். “திருவண்ணாமலை செல்வதில் இருந்து வந்த தீவிரம் குறைந்து விடுகிறது. ஆனால் திருவண்ணாமலை செல்லவில்லையே என்ற குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது. என்ன செய்வது” என்று ஐயாவிடம் கேள்வியை எழுப்பினார் அந்தப் பெண்மணி.

பகவத் ஐயா, ‘‘பக்தி யோகம், யோகப் பயிற்சியில் தியானம் என அனைத்தும் நமக்கு ஆன்மிகத்தில் நல்ல அடித்தளத்தையும், பக்குவத்தையும் கொடுக்கும். அவைகள் ஆன்மிகத்தில் நுழைவதற்கு நல்ல வாசல்களாக அமையும். அதன் பிறகு மனதைப் பற்றி புரிதல் மட்டுமே நமக்கு உதவும். ஆன்மிகத்தில் ஆரம்ப காலகட்டத்தில் எதையோ அடைவது எனத் தொடங்கி பிறகு மனதின் இயலாமையைப் புரிந்து கொண்டு நம் மனதின் எல்லாவிதமான கட்டுகளிலிருந்தும் விடுபடுவதையே விடுதலை, மோட்சம் என்று கூறுகிறோம்.” எனக் கூறி, மேலும் “நீங்கள் இத்தனை ஆண்டுகளாக கிரிவலம் சென்றதற்காக

அந்த அண்ணாமலை சாமியே இந்த ஞானப்புரிதலை கொடுத்திருப்பதாக எடுத்துக்கொள்ளுங்கள்” என்று ஐயா கூறிவிடுகிறார். பிறகு அந்தப் பெண்மணி குற்ற உணர்ச்சி நீங்கி மன அமைதி அடைகிறார்.

இப்போது நாம் நமது கேள்வியைப் பற்றிச் சிந்திப்போம். 20 வருடங்களாக தொடர்ந்து கிரிவலம் சென்ற அந்த பெண்மணிக்கு என்ன தான் நிகழ்ந்தது? எப்படி உடல் வலி ஏற்பட்டது? என்ன புரிந்து கொண்டார்?

அந்தப் பெண்மணியின் கிரிவல நடைப் பயணத்திலோ, பௌர்ணமி நாளிலோ, திருவண்ணாமலையிலோ என வேறு எதிலும் எந்த மாற்றமும் நிகழவில்லை. அந்தப் பெண்மணி, கிரிவலம் ஒன்று மட்டும் தான் தனக்கு மோட்சத்தைக் கொடுக்கும் என்று எண்ணி முழுமனதுடன் கிரிவலத்தை 20 வருடமாகத் தொடர்ந்து நடந்து வந்துள்ளார். ஐயாவின் புரிதலினால் மனதின் இயலாமையைப் புரிந்து கொண்ட பிறகு மனம் என்பது கணத்திற்குக் கணம் தோன்றி மறையக் கூடிய ஒன்று தான் என்றும், மேலும் மனதின் வழியாகத் தான்க் கடவுளை கூடப் புரிந்து கொள்ள முடியும் என்பதையும் புரிந்து கொண்டார்.

நமது கிரிவலத்திற்கும் நமது மனதின் செயல்பாட்டிற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதை விளங்கிக் கொண்டார். மனதின் செயல்பாடு சுதந்திரமானது, அது நமக்குக் கட்டுப்பட்டது கிடையாது. 20 வருடமாக, செயல்படும் சக்தியாக (Operative Energy) இருந்து செயல்பட்டு வந்த நமது அறிவு இப்போது நம் மனதிடம் தனது இயலாமையான தோல்வியை ஏற்றுக் கொண்டு அமைதி அடைகிறது. நமது அறிவு மனோரீதியாக அடைவதற்கு எதுவுமில்லை என்பதை புரிந்து கொள்கிறது. இப்படி புரிந்து கொண்ட பிறகு கிரிவலம் செல்லும் போது முழுமையான மன ஒன்றுதல் இல்லாமையால் உடல் வலி, உடல் அசதி என எல்லாம் ஏற்படுகிறது.

இதே போன்ற நிலையில் தான் நீங்களும் இருக்கிறீர்கள். நீங்கள் முதன் முதலாக அந்த ஆன்மிக யோகப்பயிற்சியை செய்யும் போது உங்களுக்கு ஓர் நிறைவான மகிழ்ச்சியும், மனநிறைவும் ஏற்பட்டதாக உணர்கிறீர்கள். அந்த பயிற்சியின் விளைவாக கிடைத்த மனோ அனுபவம் நமக்குப் பிடிக்கிறது. பிறகு அந்த அனுபவம் எப்போதும் நம்முடன் வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் தீவிரமாகப் பயிற்சியை கடைபிடிக்கத் தொடங்கி விடுகிறீர்கள். அந்த அனுபவதின் நீடித்த நிலை தான் ஆன்மிகத்தின் உச்சம் என நினைத்துக் கொண்டு பயிற்சியைத் தீவிரமாக செய்யத் தொடங்குகிறீர்கள். ஒரு நாள் பயிற்சி செய்யவில்லை என்றாலும் மனம் எதையோ பறிகொடுத்தது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது. இப்படி எல்லா வகையிலும் நம்முடைய பயிற்சிகள் நம்மை முடக்கிப் போட்டு விடுகின்றன.

எப்பேர்பட்ட அனுபவமாக இருந்தாலும் வந்து போக வேண்டிய ஒன்று தான், நிரந்தரமாக எந்த ஓர் அனுபவமும் கிடையாது. எந்த உயர்ந்த அனுபவத்தையும் உடல் ரீதியாக மட்டுமே உணர்ந்து அறிய முடியும். இப்படி நமது மனதின் செயல்பாட்டை ஐயாவின் நூல் வழியாகக் கொஞ்சம் கொஞ்சமாக புரிந்து கொள்கிறோம். நாம் புரிந்து கொண்ட பிறகு பயிற்சியிலிருந்து வந்த தீவிரம் படிப்படியாகக் குறைந்து உடல் ஆரோக்கியத்திற்குத் தேவையான அளவிற்கு வந்து நின்று விடுகிறது.

உடல் ஆரோக்கியத்திற்கு நம்முடைய தூக்கத்தை கெடுத்துக் கொண்டு அலாரம் (Alarm) வைத்து காலை 4:30 மணி முதல் 6:30 மணிவரை என இரண்டு மணிநேரம் பயிற்சி செய்யத் தேவையில்லை உடலின் எல்லா பாகங்களுக்கும், இணைப்புகளுக்கும் ஓர் அசைவு கொடுத்து ஓர் இயக்கத்தைக் கொடுத்தால் போதும். உங்கள் உடல் இயக்கத்திற்குத் தேவையான ஓர் பயிற்சியை மேற்கொண்டால் போதும். ஏதோ ஓரிரு நாள் பயிற்சி செய்ய முடியவில்லை என்றால் ஏதோ வேலை காரணமாக செய்ய முடியவில்லை என்று எடுத்துக் கொள்ளுங்கள். எதிலும் அதிகமான தீவிரம் தேவையில்லை என்பதைப் புரிந்து கொண்டால் போதும்.

பயிற்சி செய்யாமல் போவதால் ஏற்படும் குற்ற உணர்ச்சியும் ஓர் எண்ணம் தானே, குற்ற உணர்ச்சி என்ற எண்ணமும் தானாக வந்து போகக் கூடிய ஒன்று என்று எடுத்துக் கொள்ளுங்கள். மனதிற்கு எந்தப் பயிற்சியும் தேவையில்லை என்று சொன்னால் நாம் முதலில் ஏற்றுக் கொள்ள மாட்டோம். நாம் நமது மனதின் இயலாமையைப் புரிந்து கொண்டு மனோரீதியாக அடைவதற்கு எதுவுமில்லை என்பதை புரிந்து கொள்ளும் போது தாமாகவே பயிற்சியின் தீவிரம் குறைந்து விடுகிறது. உடல் இயக்கத்திற்குப் பயிற்சி தேவை. மனதிற்குப் புரிதல் மட்டுமே போதும் என்று முடித்துக் கொள்ள வேண்டும்.

**“புரிதல் ஒன்றே போதும்.”**

# வேண்டுகோள்

நமது ஆஸ்ரமத்தின் கட்டிட வரைபடம்

ஸ்ரீ பகவத் ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்,

நமது பகவத் ஐயாவிற்கு சேலத்தில் இருந்து 18கி.மீ. தூரத்தில் இருக்கும் திருவருட்சோலையில் நம் அனைவரது கூட்டு முயற்சியால் "ஸ்ரீ பகவத் பவன்" ஆஸ்ரமத்தின் கட்டிடப் பணி விறுவிறுப்பாக நடைபெற்று வருகிறது.

நாம் நம் குடும்பத்துடன் ஓய்வு நாட்களில் இங்கு வந்து தங்கி தளர்வாக ஓய்வு எடுத்துக் கொண்டு, உணவருந்தி நமது நடைமுறை ஐயங்களை ஐயாவுடன் கலந்து தெளிவு பெறவும், பல புதிய அன்பர்களுக்கு ஞானமுகாம் நடத்துவதற்கு ஏற்ற வகையிலும் கீழ்தளம் 2750 சதுர அடி, மேல் தளம் 2750 சதுர அடி என மொத்தம் 5500 சதுரஅடியில் கட்ட திட்டமிட்டுள்ளோம். சுமார் 50 முதல் 60 அன்பர்கள் நிறைவாக தங்கி மனத் தெளிவு பெற்றுச் செல்லும் வகையில் அமைக்கப்பட உள்ளது.

பகவத் ஐயாவின் கருத்துக்களை புரிந்து கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் பலரும் தாங்களாகவே முன் வந்து தங்களது பங்களிப்பை நன் கொடையாக வழங்கி வருகிறார்கள். தற்போது **Basement** முழுமையாக முடிந்து கீழ்தளம் தீபாவளிக்கு முன்பாக முதல் தளம் (Roof) போட்டுவிட வேண்டும் என்று பணியாா்கள் அங்கேயே தங்கி வேலையில் ஈடுபட்டு வருகிறார்கள்.

பகவத் ஐயா மற்றும் நம் அனைவரின் வீடான ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரம கட்டிட பணி நிறைவு செய்வதற்கு நம் குடும்ப உறுப்பினர்கள் அனைவருமே முன்வந்து தங்களது பங்களிப்பை செலுத்துவது மட்டுமே இப்பணியை சிறப்பாக முடிப்பதற்கு உதவியாக அமையும்.

நமது ஆஸ்ரம கட்டிப்பணிக்கான நிதித் தேவையின் மொத்த மதிப்பீட்டில் இதுவரை 40% மட்டுமே வந்துள்ளது. நாம் வரும் ஜனவரி 20-ம் தேதி நமது ஆஸ்ரமத்தின் திறப்புவிழாவை நடத்த திட்டமிட்டுள்ளோம். எனவே,

நமது வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக மாற்றிய நமது ஐயாவின் வீட்டிற்கு நம்மால் முடிந்த பங்களிப்பை மன நிறைவாக வழங்கிடுவோமாக.....

இதுவரை நன்கொடையாக ரூ.25,000/-மும் அதற்கு மேலும் கொடுத்து தங்களை ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தின் நிறுவனர்களாக **(Founder)** இணைத்துக் கொண்டவர்கள்

1. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
2. திரு. **E.ராமு,** சென்னை.
3. திரு. **சிவகுரு,** கரூர்.
4. திரு. **S.முருகேசன்,** சென்னை,
5. திரு. **மகேந்திரலிங்கம்,** பொள்ளாச்சி.
6. திரு. **தியாகராஜன்,** சென்னை.
7. திரு. **முரளிக்கண்ணன்,** கோவை.
8. திரு. **ஜீவமணி,** சேலம்.
9. திரு. **சரவணன்,** சேலம்.
10. திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்.
11. திரு. **குணாலன்,** கோவை.
12. திரு. **வெங்கட்ராஜ்,** சேலம்.
13. திரு. **சுகுமார் & லில்லி** குடும்பத்தினர், சென்னை.
14. திரு. Dr. **நாராயணசாமி & செந்தமிழ்செல்வி** குடும்பத்தினர்.
15. திரு. Eng. **முரளி** சென்னை.
16. திருமதி. **வடிவுஅம்மாள் & சம்பந்த** முதலியார்
17. திரு. **முத்துச்செல்வன்,** காஞ்சிபுரம்.
18. திரு. **S.கதிர்வேலவன்,** சென்னை.
19. திருமதி. **சிவசங்கரி,** சென்னை.
20. திரு. **ரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பழம், சென்னை
21. திருமதி. Dr. **விஜயலட்சுமி,** சென்னை
22. திரு. **S.பாலமுருகன்,** USA
23. திரு. **செந்தில்,** தர்மபுரி.
24. திரு. **சரவணன்-முத்துலட்சுமி,** குடும்பத்தினர், சென்னை.
25. திரு. **புலியூர் உடையான்,** சென்னை.
26. திரு. **சரவணன்,** புரசைவாக்கம்.
27. திரு. **சந்திரசேகர்,** வலசரவாக்கம்.
28. திரு. **வெங்கடேஸ்வரராவ்-சிந்தாநிலாதேவி,** குடும்பத்தினர், பாண்டிச்சேரி.
29. திரு. **மாரிமுத்து,** சென்னை.
30. திரு. **சந்திரசேகர் &** சகோதரர் திரு. **திருமூர்த்தி** குடும்பத்தினர்(சக்தி புரூட்ஸ்)
31. திரு. **தேவா ஸ்ரீராம் & தேவாஸ்ராம்** வெள்ளாளப்பட்டி.



# ஜென் கதை

# "நிதர்சனமும் மாயையும்"

அது ஒரு புகழ் பெற்ற குருகுலம். அங்குள்ள குருவை தரிசித்து ஞான உபதேசம் பெற்று செல்ல ஏராளமான மக்கள் வருவது வழக்கம். அந்த குரு அமைதியானவர். பெரும்பாலும் மவுனம் காப்பவர் அவர். தன்னிடம் ஞான உபதேசம் பெற வருவர்களிடம் ஓரிரு வார்த்தைகள் மட்டுமே பேசக்கூடியவர்.

ஒருமுறை அவ்வூருக்கு அறிஞன் ஒருவன் வந்தான். அவன் பல குருகுலங்களையும் பல குருமார்களையும் சந்தித்தவன். அவன் சந்தித்த குருமார்களிடமிருந்து தத்துவங்களையும், சூத்திரங்களையும் கற்றவன். ஊர் ஊராக பயணம் செய்து அறிஞர்கள் பலரையும் சந்தித்து உரையாடி தன் கருத்தை நிலை நிறுத்தி வந்தான்.

எந்த ஊருக்கு சென்றாலும், அங்குள்ள மக்களிடம் தன்னை ஞானியாக காட்டிக்கொள்வான். மேலும் அவ்வூரிலுள்ள குருமார்களுடன் வாதித்து தன் கருத்தை நிலை நாட்டுவதில் வல்லவன்.

இவ்வூருக்கு வந்த அறிஞன் குருகுலத்தில் மரத்தடியில் அமைதியாக அமர்ந்திருந்த குருவிடம் தன் தத்துவ உரையாடலை தொடங்கினான். குரு ஏதும் பேசவில்லை அவன் பேசுவதை மவுனமாக கேட்டுக் கொண்டிருந்தார்.

ஏகப்பட்ட உவமைகள், விளக்கங்களுடன் ஆரவாரமாகப் பேசி முடிவில், "ஆகவே எல்லாம் மாயை!!!" என்றான் அறிஞன். அவன் பேசிய எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு இருந்துவிட்டு கடைசியில், "அப்படியா?" என்றார் குரு.

இவன், "ஆம், இந்த உலகம் ஒரு மாயை, நாம் கண்ணால் காணும் அனைத்தும் நிலையானது அல்ல, நல்லது கெட்டது என்று எதுவும் இல்லை, இன்பம் துன்பம் என்றும் எதுவும் இல்லை எல்லாம் மாயையே! நாம் மாற்றி அமைக்கவோ செயல்படவோ எதுவும் இல்லை, நடப்பவை அனைத்தும் மாயையே, எஞ்சி நிற்பது வெறும் சூன்யம் மட்டுமே" என்றான்.

இப்பொழுதும் குரு பதில் ஏதும் கூறாமல் மவுனமாகவே இருந்தார். அவரது மவுனத்தை அறிஞனால் சகித்துக் கொள்ளவோ ஏற்றுக்கொள்வோ முடியவில்லை. அவன், "நீங்கள் பதில் ஏதும் கூறாமல் மவுனம் காப்பது உங்களுக்கு எதுவும் தெரியவில்லை என்பதை குறிப்பதாக நினைக்கிறேன். நான் சொல்வது உண்மை எனில் நான் சொல்வதை ஏற்றுக்கொள்ளுங்கள் இல்லை எனில் எனக்கு சரியான விளக்கம் தந்தே ஆக வேண்டும்" என்று ஒரே பிடிவாதமாக நின்றான்.

சுற்றி இருந்த சீடர்கள் இதை பார்த்து என்ன நடக்குமோ என பதட்டத்துடன் எதிர் நோக்கியிருந்தனர். குருநாதர் மிக நிதானமாக தன் அருகிலிருந்த ஊன்றுகோலை எடுத்து அறிஞன் தலையில் சுளிர் என ஓர் அடி அடித்தார். இதை யாரும் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

"ஓ" என்றலறிய அறிஞன், தன் தலையைத் தடவிக் கொண்டே, "என்ன இப்படி மட்டரகமாக நடந்து கொள்கிறீர்கள்!" என்று சீறினான்.

அனைவரது முன்னிலையிலும் குரு அடித்தது அறிஞனுக்கு மிகுந்த அவமானம் ஏற்பட்டதாக நினைத்தான்.

ஆனால் குரு எதுவும் நடக்காதது போல் தன் வழக்கமான வேலைகளை கவனிக்க தொடங்கினார்.

இது அவனுக்கு இன்னும் வேதனையை அதிகமாக்கியது. 'இவர் வேண்டுமென்றே அனைவரின் முன்னிலையிலும் நம்மை அவமானப்படுத்தி விட்டார்.' என நினைத்து பொருமினான்.

'இனி நம்மை யாரும் மதிக்க மாட்டார்கள், எப்படி வெளியே தலை காட்டுவது' என மனவேதனையில் துடித்தான். சிறிது நேரத்தில் சீடர்கள் அனைவரும் அவர்களுடைய வேலையை கவனிக்க தொடங்கி விட்டார்கள்.

அறிஞன் மட்டும் அந்த இடத்தை விட்டு நகரவில்லை அவன் மனம் அமைதி அடையவில்லை. இந்த குருவுக்கு எப்படி பதிலடி கொடுப்பது என உணர்ச்சிவயப்பட்டு யோசித்துக் கொண்டிருந்தான்.

குரு எதையும் கண்டுகொள்ளாமல் தன் பணியைக் கவனித்து கொண்டிருந்தார். நேரம் கடந்து மாலையானது. இந்த அறிஞன் தான் இருந்த இடத்தில் இருந்து கொண்டே குருவின் செயல்பாடுகளை மெதுவாக கவனிக்கத் தொடங்கினான். குரு இவனுக்கு தேவையான உணவுகளை எடுத்து வந்து தன் கையால் பரிமாறி "பசியோடு இருக்கிறாய், சாப்பிடு" என்றார்.

இவன் மனம் பதட்டத்தில் இருந்து நிதானத்திற்கு வந்தது. குருவிடம், "எதற்காக என்னை தடியால் அடித்தீர்கள், வலி தாங்க முடியவில்லை, உங்களை போன்ற துறவியிடம் இருந்து இப்படிப்பட்ட ஒரு செயலை கொஞ்சமும் நான் எதிர்பார்க்கவில்லை" என்றான்.

குரு அமைதியாக, "அடியாவது, வலியாவது எல்லாம் மாயையாக இருக்கும் போது எப்படி என் செயல் உனக்கு துன்பத்தை கொடுத்திருக்க முடியும். எல்லாம் சூன்யமாக இருக்கும் போது எங்கிருந்து வலி வந்தது?" என்று கேட்டார்.

குருவின் பதிலால் அறிஞன் திகைத்துப் போனான். "குருவே என் கருத்தில் ஏதோ தவறு இருக்கிறது என்பதை உங்கள் அடி எனக்கு புரிய வைத்துவிட்டது. ஆனால் எது மாயை என்பது புரியவில்லை, சற்று விளக்குங்கள்." என்றான் அறிஞன்.

"இந்த உலகம் என்றும் உண்மையானது தான், உலகத்தைப் பற்றிய உனது நினைவுகள் தாம் மாயை" என்றார் குரு.

மேலும் "நான் என் ஊன்று கோலால் உன் தலையில் அடித்தது நிதர்சனமான உண்மை, அதைப்பற்றி நீ இவ்வளவு நேரம் மனதில் சுமந்து கொண்டிருந்த நினைவுகள் மாயை" என்றார்.

அறிஞன் நிதர்சனத்தையும் மாயையும் புரிந்து கொண்டான்.

**"உலகம் என்பது நிதர்சன உண்மை!**
**உலகத்தை பற்றிய நினைவே மாயை!!"**





திருவருட்ச்சோலையில் “ஸ்ரீ பகவத் பவன்”ஆஸ்ரமத்தின் கட்டிடப்பணி



திரு. சந்திரசேகர் மற்றும் சகோதரர் திரு. திருமூர்த்தி அவர்கள் ஸ்ரீ பகவத் ஐயாவுடன்



பழனி ஞானமுகாமில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் மெய்த்தவ பொற்சபை திரு. செந்தில் அடிகள், அருள்நிதி N. சோமசுந்தரம், நாகப்பட்டணம் திரு. முத்துச்செல்வன் அவர்கள்



வில்லிவாக்கம் சத்சங்கத்தின் போது



அம்பத்தூர் சத்சங்கத்தின் போது

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555